உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நடராஜபுரம்

ஸ்ரீ பர்வதவர்த்தனி அம்பாள் சமேத

# இராமநாதசுவாமி மஹாத்மியம்



இஃது

நடராஜபுரம்

ஆ. ந. ஆ. சொக்கலிங்கச் செட்டியார்

அவர்களால்

பதிப்பிக்கப்பெற்றது.

1922.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

நடராஜபுரம்

## ஸ்ரீ பர்வதவர்த்தனி அம்பாள் சமேத

# இராமநாதசுவாமி மஹாத்மியம்.

காப்பு.

ங்க ளங்குழவி யென்னத் திகழொரு மருப்பிற் சோதி
ங்கு கிம்புரி வயங்கத் தடாமணி மகுடந் தாங்கித்
ங்க நல்வரங்க ளல்குந் தூயசி ரிராம சேதுப்
நவர் வணங்கும்யானை முகத்தனைப் போற்றல்செய்வாம்.

இராமநாத சுவாமி துதி.

பூந்தவிசி னிருந்தபிரான் முதலோர் காண
புண்டரிக மகள்கொழுநன் புகழிலங்கை
வேந்தனுயிர்ப் பழிசமுவு முகத்தால் யார்க்கும்
விடையவனே யுடையவனும் மேவதவாய்மை
யாந்தரங்கம் வெளிசெய்வா னனைவ ரோடு
மணைந்து கந்தமாதனத்தி லருச்சித்தேத்து
மேந்துபுனற் சடைமுடி யிராம நாத
னிணையடிச் செந்தாமரைக ளிறைஞ்சி வாழ்வாம்.

பர்வதவர்த்தனி யம்மை துதி.

தண்ணெனவும் வெட்டெனவுந் தந்துசாயாத்
தகைபயின்று விடநீக்கித் தலைவற்கென்று
முண்ணமுதந் தனையுதவி யிமைய மேரு
வுயர்சிகர மந்தரத்தை பொருவிச்சேர்ந்துங்
கண்ணுதலை விளர்ப்புறலாற் கயிலை யெள்ளிக்
கௌணியர்க்குத் தமிழ் சுரக்குங் காட்சியாலே
வண்ணமுலை மலயமலை டானுங் கன்னி
மலைவளர்கா தலிமலர்த்தாள் ... வணங்குவாம்.



### சபாநாதர் துதி.

சீராருஞ் சதுர்மறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
ஏராரு மணிமன்று ளெடுத்ததிரு வடிபோற்றி.

### சிவகாமசுந்தரி துதி.

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத்திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி.

### விநாயகர் துதி.

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

### சுப்பிரமணியசுவாமி துதி.

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற வீராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

### பரமாசாரியசுவாமிகள் துதி.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

### அறுபத்துமூவர் துதி.

தத்து மூதெயின் மூன்றுந் தழல்லழ
முத்து மூரன் முகிழ்த்த நிராமய
சித்து மூர்த்திதன் றுளிணை சேரறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம்.

திருச்சிற்றம்பலம்.

உ

45

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

இராமநாதபுரம் ஜில்லா வேப்பங்குளம்
செ. மு. முத்தையப் பாவல ரவர்களால் இயற்றிய

## நடராஜபுரம்

# திருக்கோயிற் சிறப்பு.

---

நேரிசையாசிரியப்பா.

வடவேங் கடமுந் தென்கடற் குமரியு
மிடமாக் கொண்ட விருந்தமிழ் நாட்டினுள்
அறப்பெருங் கருணையா லழகிய பொதுவிற்
சிறப்புட னடிக்குஞ் சிவபரம் பொருளெம்
இறைமான் மழுக்கர னிருநான்கு தோளன்
மறையினுந் தொடரா வானவர் நாயகன்
உடுக்கைத் தரித்தோ னுருவமூன் றுனோன்
கடுக்கையங் கொன்றை கரந்தைவெள் ளெருக்கு
கூவிள மத்தங் குளிர்பிறை யறுகு
மேவிடு மாத்தி வெள்ளமு மிளிர்சடைப்
பெரியவன் நெடியவன் பிரமனுந் தேடற்
கரியவ னங்கண னையனங் காடிய
இளைப்பினை யகற்றவு மினிதருள் சுரந்தே
யாப்பரு மாட லறுபத்து நான்கும்
இயற்றவு முன்னி யெம்மம்மை யாய
கற்கணி திருமணங் கண்டுகு குய்ய
பின்முடி மறைத்து வேப்ப மாலையின்
பொன்முடி புனைந்து புரையிலா வரிய
வழுதியர் தவத்தால் வழுதியா யடியார்
பழுதினைப் பாற்றிப் பரிவுட னரசுசெய்

பெருமையும் பல்வளம் பிறங்கப் பரவிய
பொருநையும் வைகையும் பொதிகையுந் தென்றலும்

அண்ணலா ராடலு மணியுறப் பெற்றும்
எண்ணுலாஞ் சங்கத் தெழிலினை யடைந்தும்

மலயமா முனிவனின் வாழ்வுமேன் முத்தி
நிலயமா மிதுவென நிலவி யாணரால்

ஆடகத் தவிர்மணி யணிமபறக் குயிற்றிய
மாட மூதூர் மதுரையம் பதியினைத்

தலைநக ராகத் தாங்கிய பாண்டித்
தலைநா டாயகன் னித்தாய் நாட்டின்

அம்பந்த மறையினை யருந்தமி ழாக்கி
நம்பந்த மறுத்த சம்பந்தக் களிறும்

பிறவிப் பெருங்கட னீந்திடும் புணையாய்
நறவுப் பெருக்குமிழ் நாவுக் கரசரும்

இறைவனுக் கடியவ ரேவருந் தோழராந்
துறையினை யளித்தநஞ் சுந்தர மூர்த்தியும்

தேட்டாற் சிவம்பெறத் தெளிவிலா வெமக்குப்
பாட்டாற் பரவெளி பாருமென் றிரங்கி

மாசகங் கடக்கும் வன்மை சேர்நற்றிரு
வாசகந் தந்தநம் வாதவூர் வள்ளலும்

திருவாய் மலர்ந்த பாடலிற் செறிந்துநல்
லுருவாய் கோபுரத் தொள்ளொளி விரிந்து

பாரினிற் பலவாந் தீர்த்தமும் பராவுஞ்
சீரிய வுருத்திர தீர்த்தமுந் திகழ்ந்து

எனையம் பதிதமி லேற்றமிக் கோங்கிடுங்
கானையம் பதியாங் காளையார் கோயிற்

கணித்தாய் வடபா லமரா பதியிறை
நணித்தாம் பல்பகல் நல்வளங் கண்ணுற

விழுமிய சிறப்பு மேன்மையுஞ் செறிந்து
கெழுமிய தண்டலை யரணு வளைந்த

புதுத்தள வரும்பும் புறவமுஞ் சோலை
மதுத்துளி வார்ந்து வாவியிற் படிந்து

மடையுடைத் தகன்ற வயல்களிற் பெருகிப்
புடையுடைக் குட்டை குளங்கூப மேரியின்

நிறைந்து பைங்கமுகு நெற்கன்னல் வாழை
சிறந்து விண்ணுற்றிற் றேரூர்ந் துழலும்

கதிரவன் குதிரையின் கவடு புண்ணுக
வதிதர வளர்ந்து மள்ளர்கள் வகுப்பாய்த்

தாரணி வியக்கத் தகுமெரு தினங்களி
னேரணி யிலங்க வெழில்பெற வுழுங்கால்

புரண்டுகழ் கயலினம் வரம்பினிற் பொலியத்
திரண்டெழுந் தோடுந் தீம்புனற் பெருக்கில்

தாக்குறும் பணிலக் குமுறலிற் றலையினைத்
தூக்கியே யிரண்டு துய்யவொள் வாளைகள்

துள்ளமீப் பாய்ந்து சூன்முகிற் கீண்டு
தள்ளிய மாமழைத் தாரையின் வழிமீண்

டாடுபூங் கமுகி னணிமட லுடைக்கச்
சாடுற விரிந்த தண்ணறும் பாளையின்

பொலிந்திழி மதுவாற் புலான்மண மொரீஇ,
மலிந்தபொன் மலையினையடுத்தமற் றனவெலாம்

அத்தகை யாமெனு மரும்பெருஞ் சொற்குஞ்
சத்தனை யுணர்ந்தோர்ச் சார்ந்தவை னையரும்

அன்னவர்ப் போன்றே யாகுவா ரென்ன
முன்னையோர் விரித்த முதுமொழி தனக்கும்

இலக்கண மாக வெழில்பெற வளருந்
தலக்கணி யாய தண்புனன் மருதமும்

பெருவளந் தனைத்தரப் பிறங்கித் தாமரைத்
திருவளர் செல்வமுஞ் செந்தமிழ்ச் செல்வமும்

ஈறின்றி யோங்கு மெழினலந் தாங்கி
மாறின்றித் தாமே மகிழ்ந்திறு மாந்தே

அறமக ளாக்கமு மழகிய புலனெறித்
திறமக ளாக்கமுஞ் செவ்வனே பெற்றுப்

படரென் றுமணுகாப் பான்மையுற் றோங்கும்
நடராஜ புரமெனு நற்பதி தன்னில்

வாழ்வுகொண் டேறும் வருணத் தவர்களிற்
றாழ்வின்றி வளருந் தனமிகு வணிகர்கள்

அறநெறி யாய்ந்தோ ரருட்பெருஞ் சைவமாந்
திறநெறி சேர்ந்தோர் திருக்கிலா மனத்தோர்

இன்னோ ராய விசைப்பெருஞ் சிலர்கள்
முன்னையோ ருரைத்த முதுமொழிக் கிலக்காய்த்

திருக்கோவி லின்றேற் றிருவிலா வூரென
மருக்கிளர் வாக்கின் மன்னனா ரருளிய

திருப்பெரும் பாட்டின் சிறப்பினை யுணர்ந்து
உருப்பெரும் பரம னுள்ளுறை கோயில்

வகுக்கநம் மரபினோர் வம்மினென் றணைந்து
மிகக்களித் தரும்பொருள் விரைவினிற் றிரட்டி

நன்னாட் டொடங்கி நல்வினை யாணராற்
பொன்னாட் டவரும் புதிதென வியக்க

விதிமுறை வழாது விளங்கிடக் கோயிற்
பதியெழுந் தருளப் பண்புட னமைத்துப்

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட் பேறல்ல பிறவெனும் பொய்யா

மொழியினைத் தாங்கி முன்னா ளிராகவன்
பழியினை யகற்றிய பழம்பதி யாய

திருவிரா மேச்சுரத் தெய்வத் தலத்தில்
வருமராச் சூடியோன் வரம்பெற் றுங்குள
சிவலிங் கத்தினைச் சிறப்பொடு கொணர்ந்து
தவலிங்க மென்று தாமிகக் களித்தே

அன்பா லமைத்த வழகிய கோயிலில்
இன்பா விலங்கு மெழிற் பரஞ்சுடரை

இனிதெழுந் தருள வியற்படி யமைத்தே
கனியுமெம் மமுதாங் கருணையங் கடலை

எண்ணியாங் கிராம நாதனென் றேத்திப்
பண்ணுலாந் தேன்மொழிப் பர்வத வர்த்தனி

விசுவேசர் நந்தி விசாலாக்ஷி யம்மையும்
பசியசிற் சபைதனிற் பாதங் காட்டாது

நேமியோன் காணநின் றாடிய நிருத்தன்
காமியந் தருஞ்சிவ காமி யம்மையும்

கல்லா லமர்ந்து கதியரு டெய்வமும்
வல்லபை கணேசனு மயிலேறு முருகனும்

படர்கழல் வடுகனும் பாற்றிரு மஞ்சனத்
தடர்பகை யாயதந் தைதா ளெறிந்தாங்

கிடபக் குன்றி லிறைவனை யேத்தி
வடபாற் றங்கென வரம் பெற்றிறைவன்

தண்டா ராய கொன்றைத் தாமமுங்
கொண்டினி தமருஞ் சண்டேச ரும்

நமையாள் கருணை நாயன் மாராய
சமயா சாரியப் பெருந்தகை நால்வரும்

கோளொன்பதின் மருங் குவலயத் தவரை
ஆளு மிலக்குமி யம்மையு மொருங்கே

தவறின்றி முறையாய்த் தனித்தனி வகுத்தாங்
கவரவர்க் குரிய வுறைவிடத் தமைத்தும்

வளங்குஞ் சாலிய வாகன சகாப்தம்
விளங்கு மாயிர மேலெண் ணூற்றொடு

நாலு பத்தைந்து நலந்தரு துந்துபி
சீல வைகாசி திகழெண் ணான்கினில்

மங்கள மேலாய் வருபுதன் கிழமைப்
பங்கமில் கிருட்டின பக்கம் பஞ்சமி

திடமிகு வோணஞ் சித்த யோகமு
மிடப லக்கினமு மினிமையாய்க் கூடி

அதி மேன்மையாக வமைந்த நன்னாளிற்
கதிரவன் கண்ணுற வெழுந்த காலையில்
அம்பிகை பாகர்க்கு மாதி சைவராற்
கும்பாபி டேகங் குறைவின்றி நடாத்தி
கண்ணு மனமுங் களித்திடக் காட்சிகண்
டெண்ணும் வாயு மிறைபாற் செலுத்தி
நாத்தழும் பேற வாழ்த்தி யேத்திப்
பூத்தபன் மங்களம் பொலிந்திட வன்புறு
ஐந்து தெய்வத் தழகிய பேருலா
விந்திரன் களிக்க வெழில்பெற நடாத்தி
உள்ளும் புறம்பு மொருங்கு பூரிக்கக்
கள்ளவிழ் கொன்றை கண்ணிய முழுமுதல்
கடவுளா மிராம நாதர்நங் கண்ணுதற்
படர்பெருங் கருணைப் பர்வத வர்த்தனி
அம்மை யாரையும் பணிந்தக மகிழ்ந்து
செம்மைசேர் மனத்தராய்த் திருவருள் குறித்து
வேண்டுவார் வேண்டியாங் கீவா னென்றுவாக்
காண்டகை யார்சொலு மரும்பொருட் பாட்டின்
உறுதிகொண் டிறைவ னிறைவிபால் வரங்கள்
பெறுவன வெல்லாம் பெற்றினி தோங்கி
அமைத்த நாட்டொடங்கி யண்ணலார் பூசனை
யிமைத்திலா நாட்டத் தேவருந் துதிக்க
வழுவின்றிப் புரிந்து மங்கல வணிகர்கள்
குழுமியே செல்வங் குவியவாழ் கின்றனர்
அப்பெருங் கோயிற் சிறப்பினைத் தமிழிற்
செப்பமா யிசைத்துச் செழிப்புறத் தருகென
அங்குவாழ் வணிகனெம் மருளிறை யடியோன்
தங்குலந் தழைத்திடத் தழைத்துப் பிறந்தவன்
ஆதப்ப வணிக னருந்தவப் புதல்வன்
ஆதப்ப னெனும்பே ரமைந்துளோன் வளருஞ்

சொக்கலிங் கப்பெயர்த் தூயவ னெம்பான்
மிக்கபே ரன்பினேன் மேன்மையின் மேன்மையாந்

தூயசித்தாந்தச் சுவையுறு துறையினேன்
மேயநற் கற்பினேன் மேலும் விழைவினேன்

பெரும்பொருட் செல்வன் பேற்றிற் சிறந்தோன்
வரும்பொ ருளீட்டிடும் வழியினி லொழுகுவோன்

இன்னோன் பன்முறை யெம்மிடந் தெரிக்க
வன்னோன் சீலத் தழகினுக் கிணங்கி

அவனரு ளாலே யவன்றுள் வணங்கியென்
றெவர்வாய் மலர்ந்ததோ வவரடி வணங்கி

எமது சிற்றறிவினுக் கெட்டியவாறே
நமதென வேவரு நட்புடன் படிக்க

ஆன்றோர் மொழிகளு மிடையிடை யமைத்துச்
சான்றோர் மரபினிற் றமிழைத் தந்தனன்

மன்பெறு மநநகர் வணிகரி னீட்டமு
மென்பா லன்புடை யெழிற் சொக்க லிங்கமும்

பருவத வர்த்தனி யம்பிகை சமேதக்
குருமதி கடுக்கை கூவிளஞ் சூடிய

சடைமுடி யிராம நாதன்றண் ணருளினல்
உடைப்பொரு ளுடைமைப் பொருளா மிரண்டொடும்

அருமையா யிப்புவி யதனிற் பிறந்தவர்க்
கிருமையின் பயன்றரு மெழின்மகப் பேறும்

ஏனைய பேறுடன் பதினறும் பெற்று
நானிலம் புகழநல் வாழ்வுற் றோங்கி

மனக்குறை யகற்றி மகிழ்ந்தறம் பெருக்கித்
தனக்குறை வின்றித் தழைத்து நீடூழி

வாழி வாழிய வண்டிருக் கோயில்
வாழி வாழிய வளமிகு மநநகர்

வாழி வாழி வாழிய
வூழி தோறுநின் றோங்கிட வாழியே.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இராமநாதரை வழிபடுவதால் அடையப் பெறும் பேறு.

பூமலி யிதழி சூடும் புதுநிலா மகுட வேணி
நாமலி சுருதி போற்று நம்பிரா னிராம நாத
னேமலி சிலை யிராமற் கிராவணப் பிரம கத்தித்
தீமலி யிடுக்கண் டீர்த்த சேவடி சென்னி வைப்பாம்.

ஏருலாவு சூதன்மீண்டு முனிவரோ டியம்புவான்
சீருலாவு செவியினூடு சென்றுபுக்க வளவிலே
காரினீடு மிருடேரந்து கதிவளங்கு காதைபொன்
மேருவில்லி ராமநாதன் மேன்மை கேண்மி னென்றனீரா.

அருளுடை யிராம நாத னமர்ந்தரு ளால யத்தைத்
தருவினற் றருவோன் சுற்றந் தன்னின்முக் கோடி சுற்ற
மருவுவான் புகுதுக்கோயில் வளங்கொளிட் டிகையாற்செய்தோன்
றிருமறு மார்பன் வாழுஞ் செல்வவை குண்டஞ் சேரும்.

கற்கிளர் கற்கி செய்தோன் கமலனூ ராளுங் காம
ரெற்கெழுபளிங்குதன்னிலிலங்கொளிவிமானஞ்செய்தோன்
பொற்கொடி விமானத்தேறிப் புகுஞ்சிவபுரத்தின் ஞாங்கர்ச்
சிற்குண னுடனிருப்பன் சேதிமஞ் செம்பாற் செய்தோன்.

வெள்ளியா னிகேதனத்தை விரும்பினல் விதித்தோன்முக்
வள்ளறன் வடிவமாகி வரம்பிலா மகிழ்ச்சிகூரும் [கண்
தெள்ளுசீ ராடகத்தாற் சினகரஞ் செய்தமேலோ
னுள்ளுணர் சிவக்கொழுந்தா மொன்றுடனிரண்டின்றுவன்.

இங்கிதி லிலிங்கந் தாபித் திடும்பல மியம்ப லாற்றுன்
பங்கயன் ருனு மாக்கள் பாலதோ பகருந் தன்மை
கங்கைசேர் காசிலிங்கங் கண்டதிற் கோடிபேறு
துங்கநீ நிறுவி லிங்கச் சோதியைத் தொழுவார்க்குண்டாம்.

வருவதோர்தொடர்ச்சி தன்ஞன் மனக்கவர் மகிழ்ச்சிதன்ஞல்
வெருவிஞனு லோபந்தன் ஞல் விளங்குமவ்விலிங்கந்தன்னைக்
கருதினோர் புகழ்ந்தோர் செய்தகடுங்கொடு வினைகளெல்லா
மெரிகொளிந் தனமா மேவு மிகபர மிரண்டி லின்பம்.

சீரணி யிராம நாத தெரிசனம் பண்ணி ஞனுக்
காரண நான்கும் வல்ல வந்தணன் ருனு மொவ்வான்
ருரணி வணங்கி ராமேச் சரன்றனைக் கண்டோர் தம்மிற்
பேரணி யோக வாணர் பெறுகதி பேத மில்லை.

இலவிதழ் முகிழக்கொங்கை யிடம்பயி லிராம நாத
னலேபுனன் முடியி லான்பா லதனிஞ லாட்டு கிற்பான்
றலைமுறை யேழு மூன்றுந் தமரொடுந் தருக்கி வாழும்
புலவர்போற் றிசைக்கு முக்கட் புராதனன் சிவபு ரத்தில்.

நாற்புவி போற்றி ராம நாதனுக் காட்டற் கேனு
நீற்பொலி கண்டத் தன்னே னிவேதன மதனுக் கேனும்
பாற்பசு வுதவு நல்லோன் பரிமேத பலமு மெய்தி
மேற்பரஞ் சுடரா யென்றும் விளங்குவன் சிவலோ கத்தில்.

சந்தன நறுங் குழம்பு சாத்துவான்ற யங்கு பாடற்
கந்தரு வத்தர்வாழுங் கடிநகரடைவன் கஞ்சக்
கொநதலர் வாசமேவுங் குளிர்புன லாட்டுவிப்பா
னிந்திர ஞேடுமன்ஞ னிருக்கையுற் றின்பங்கூர்வன்.

நரைவிடை யூரிராம நாதனுக் கிலங்குசோதித்
தரளமா ரலங்கலீவார் தாங்கணல் குரவிற்ருழா
ரரவமார் கங்கைநீரா லவ்விலிங்கத்தை யாட்டும்
வரமுளார் தம்மைமுக்கண் வள்ளனும்வரிசை செய்யும்.

அருகுசேர் பாடலாட லபிடேக வேளைதன்னின்
முருகுமுன் னியங்கள்கால மூன்றினு முயங்கச்செய்வோன்
றிருகுவெம் பவங்கணீங்கிச் சிறப்பினோ டிமையவெற்பின்
மருகனா மிராமநாதன் வளர்சிவ புரத்தின் வாழ்வான்.

குடைகொடி விசிறிசாந்தங் குக்குலுக் கொடுக்குமன்ப
ரடையவின் ஞாலமெல்லா மளித்திடு மரசராவர்
தொடைபுனை வதற்காம்வாசத் தூமலர் வழங்குவார்க்கு
நடைமிகு புரவிமேத நன்மகப் பேறுண்டாகும்.

சருக்கரை செய்யசாலித் தண்டுல மெண்ணெயானெய்
பருப்பவை வழங்குமன்பர் பண்ணவர்க் கண்ணலாவர்
பொருப்புவி லிராமலிங்கம் பூசனை புரியக்காண
வுருப்பொலிவுணரத்தீண் டவொழிந்திடும்வினைகளெல்லாம்.

மராமர மேழுமங்கோர் வாளியாற் றுளைத்தவள்ள
லிராமனா தரத்தாலர்ச்சித் தேத்திய விறைவற்கேற்ற
கிராமமீகுநர்தாம் யாக்கைக் கேட்டினிற் கேடிலாத
வராவணி வலயத்திண்டோ ளையன துருவமாவார்.

தங்குமித் தரையில்வானிற் றலைமைசால் பாத்திரத்துப்
பங்கயன் றலையாற்செய்த பாத்திரங் கையிலேந்து
மங்கண னிராமநாத னதிகபாத் திரமாமந்தச்
சங்கரற் குதவுமற்பந் தான்பெரி தளப்பின்றாகும்.

இதந்தரு மிராமலிங்க மிருக்குமூர்க் கேகுவார்க்குப்
பதந்தொறும் புரவிமேதம் பண்ணிய பலமுண்டாகும்
விதங்கெழு மலர்நீர்பன்ன மென்கனி வழங்குவாரைச்
சிதைந்திடா தருளுமென்றுஞ் சிவபிரா னிராமநாதன்.

ஐயர்காள் யாவரேனு மாக்கையஞ் சிறையிற்றீரா
வுய்யுமா றன்பினீல லோகிதா வுலகநாதா
செய்யசீ ரிராமநாதா செஞ்சடை முடியா வென்பார்
வையக வடிவமாகு மாயையான் மயங்க லில்லார்.

எற்பட வெழுந்துமுக்கா லிராமநா தாவென் றக்கான்
முற்பகற் பவங்க டீரு மொழியுமவ் விலிங்கமூர்த்தி
யற்பினர்க் கருளவேண்டு மாதர மேவி யென்றும்
விற்பயில் கதிராங்காணும் விழியினர் துயர்ப்பனிக்கே.

முதலுகத்தி னுண்டுபத்தின் முற்றுகின்ற புண்ணிய
மதுதிரேத நல்லுகத்தொ ராண்டினெய்து மஃதுறுந்
துதிகொடிங்க ளொன்றினிற் றுவாபரத்தி னப்பலங்
கதிருலாவு வாரமொன்றி னுதவுநீடு கலியுகம்.

பாடிலாத கலியுகத்தோர் பகலின் மேவுபயனினுங்
கோடிகூறு மிகுதிகொண்ட சோதிலாத நல்லற
நாடொணாத நிமிடமொன்றி னண்ணுமாய னுன்முகன்
றேடிராம நாதனெந்தை தெரிசனத்தி னலரோ.

போகமும் வீடுமில்லாப் புனிதனே போற்றிபோற்றி
யாகுமா ரவையிரண்டு மடியவர்க் களிப்பாய்போற்றி
மோகமார் மாயைதன்னுன் முகுந்தனு யயனுய்த்தோன்று
மேகனே போற்றிபோற்றி யிராம நாயகனேபோற்றி.

மாதுமலை வளர்காதல் வல்லிவாழ்க
மாற்கருள்கூர் சிவராம நாதன்வாழ்க
சேதுவுடன் றனுக்கோடி தீர்த்தம்வாழ்க
திகழ்தீர்த்த மறுநான்குஞ் சிறந்துவாழ்க
நாதனிராமேச்சுரனை யருச்சிப்போரு
நற்றுனந் தலமனைத்து நயந்துவாழ்க
மாதவர்கண் மிகவாழ்க விராமநாத
மாமுனிவ னீடுழி வாழ்கமாதோ.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

---

## திருவிராமேச்சுரம்

# திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்

## மூன்றாந் திருமுறை.

---

பண்-காந்தாரபஞ்சமம்.

---

திருச்சிற்றம்பலம்.

அலைவளர் தண்மதியோடயலே யடக்கியுமை
முலைவளர் பாக முயங்கவல்ல முதல்வன்முனி
இலைவளர் தாழைகள் விம்முகான விராமேச்சுரம்
தலைவளர் கோலநன் மாலையன்றானி ருந்தாட்சியே. (1)

தேவியை வவ்விய தென்னிலங்கைத் தசமாமுகன்
பூவிய லும் முடிபொன்று வித்த பழிபோயற
ஏவிய லுஞ் சிலையண்ணல் செய்த விராமேச்சுரம்
மேவிய சிந்தையினார் கடம்மேல் வினைவீடுமே. (2)

மானன நோக்கியை தேவிதன்னை யொருமாயையால்
கானதில் வவ்வியகா ரரக்கன் னுயிர்செற்றவன்
ஈனமிலாப் புகழண்ணல் செய்த விராமேச்சுரம்
ஞானமு நன்பொருளாகி நின்றதொரு நன்மையே. (3)

உரையுணராதவன் காமமென்னும் முறுவேட்கையான்
வரைபொரு தோளிறச் செற்றவில்லி மகிழ்ந்தேத்திய
விரைமருவுங் கடலோதமல்கு மிராமேச்சுரத்
தரையரவாட நின்றாடல்பேணு மம்மா னல்லனே. (4

றுடை வெண்டலை கையிலேந்திப் பலவூர்தொறும்
றுடை மங்கையரை யம்பெய்ய விறலார்ந்ததோர்
றுடை வெல்கொடி யெந்தையேய விராமேச்சுரம்
றுடை யான்பெய ரேத்துமாந்தர் பிணிபேருமே. (5)

ணையலை சூழ்கடலன் றடைத்து வழிசெய்தவன்
ணையிலங்கும் முடிபத்திறுத்த பழி போக்கிய
ணையிலி யென்று மிருந்தகோயி லிராமேச்சுரம்
ணையிலி தூமலர்ப் பாதமேத்தத் துயர்நீங்குமே. (6)

ணிபுதன் ஞாயிறுவெள்ளி திங்கட்பல தீயன
ணிவது செய்துகந்தானை வென்றவ் வினைமூடிட
ணியரு ணல்கிடென் றண்ணல்செய்க விராமேச்சுரம்
ணிமதி சூடிநின் றாடவல்ல பரமேட்டியே. (7)

ருவரை யன்றெடுத் தேந்தினான் றன்பெயர்சாய்கெட
ருவரையா லடர்த்தன் றுநல்கி யயன்மாலெனும்
ருவரு நாடிநின் றேத்துகோயி லிராமேச்சுரத்
தாருவனுமே பலவாகி நின்றதொரு வண்ணமே. (8)

க்கியர்வன் சமண்கையர் மெய்ப்பிற் றடுமாற்றத்தார்
சக்கியனும் முரைபற்று விட்டுமதி யொண்மையால்
க்கியனுஞ் சிலையண்ணல் செய்தவிராமேச்சுரம்
க்கிய செல்வனை யேத்திவாழ் மின்னருளாகவே. (9)

கலவன்மீ தியங்காமைக் காத்த பதியோன்றனை
கலழி வித்தவனேத்து கோயிலிராமேச்சுரம்
கலியுண் ஞானசம்பந்தன் சொன்ன தமிழ்புந்தியால்
கலிட மெங்குநின் றேத்தவல்லார்க் கில்லையல்லலே. (10)

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

## மூன்றாந் திருமுறை.

---

பண்பழம் பஞ்சுரம்.

---

திருச்சிற்றம்பலம்.

திரிதருமாமணி நாகமாடத் திளைத்தொரு தீயழல்வாய்
நரிகதிக்க வெரியேந்தி யாடுநலமே தெரிந்துணர்வார்
எரிகதிர் முத்தமிலங்குகான லிராமேச்சுரமேய
விரிகதிர் வெண்பிறைமல்குசென்னி விமலர்செயுஞ்செயலே.

பொறிகிளர் பாம்பரையார்த்தயலே புரிவோடுமைபாடத்
தெறிகிளரப் பெயர்ந்தெல்லியாடுந்திறமே தெரிந்துணர்வார்
எறிகிளர்வெண் டிரைவந்து பேருமிராமேச் சுரமேய
மறிகிளர்மான்மழுப்புல்குகையெம்மணாளர்செயுஞ்செயலே.

அலைவளர் தண்புனல்வார்சடை மேலடக்கியொருபாகம்
மலைவளர் காதலிபாட வாடிமயக்கா வருமாட்சி
இலைவளர் தாழை முகிழ்விரிய மிராமேச்சுரமேயார்
தலைவளர்கோலநன் மாலைசூடுந் தலைவர்செயுஞ்செயலே. (3)

மாதனநேரிழையேர் தடங்கண் மலையான் மகள்பாடத்
தேதெரியங் கையிலேந்தி யாடுந்திறமே தெரிந்துணர்வார்
ஏதமிலார் தொழுதேத்தி வாழ்த்து மிராமேச்சுரமேயார்
போதுவெண்டிங்கள் பைங்கொன்றை சூடும்புனிதர்செயுஞ்
[செயலே. (4)

சூலமோடொண்மழு நின்றிலங்கச் சுடுகாடிடமாகக்
கோலநன்மாதுடன்பாட வாடுங் குணமேகுறித்துணர்வார்
ஏலநறும் பொழில்வண்டு பாடுமிராமேச்சுரமேய
நீலமார்கண்டமுடைய வெங்கணி மலர்செயுஞ்செயலே. (5)

கணைபிணைவெஞ்சிலை கையிலேந்திக் காமனைக்காய்ந்தவர்தாம்
இணைபிணைநோக்கி நல்லாளொடாடு மியல்பின ராகிநல்ல
இணைமலர்மேலன்னம் வைகுகான லிராமேச்சுரமேயார்
அணைபிணைபுல்கு கரந்தைசூடுமடிகள்செயுஞ் செயலே. (6

நீரினார்புன்சடைபின்பு தாழநெடு வெண்மதிசூடி
ஊரினார்துஞ்சிருள் பாடியாடு முவகைதெரிந்துணர்வார்
ஏரினார் பைம்பொழில்வண்டுபாடு மிராமேச்சுரமேய [லே.
காரினார்கொன்றைவெண்டிங்கள்சூடுங்கடவுள் செயுஞ்செய

பொன்றிகழ்சுண்ண வெண்ணீறுபூசிப்புலித்தோலுடையாக
மின்றிகழ் சோதியர் பாடலாடன் மிக்கார்வருமாட்சி
என்றுநல்லோர்கள்பரவியேத்துமிராமேச்சுரமேயார்[கையே.
குன்றினலன்றரக்கன் றடந்தோ ளடர்த்தார்கொளுங்கொள்

கோவல னான்முக னோக்கொணாத குழகனழகாய
மேவலனோள்ளெரி யேந்தியாடுமிமையோ ரிறைமெய்ம்மை
ஏவலனார் புகழ்ந்தேத்தி வாழ்த்துமிராமேச்சுரமேய
சேவலவெல்கொடி யேந்துகொள்கை யெம்மிறைவர் செயுஞ்
[செயலே. (9)

பின்னொடுமுன்னிடு தட்டைச்சாத்திப் பிரட்டே திரிவாரும்
பொன்னொடுஞ்சீவரப்போர்வையார்கள்புறங்கூறல்கேளாதே
இன்னெடுஞ் சோலைவண்டியாழ் முரலுமிராமேச்சுரமேய
பன்னெடுவெண்டலைகொண்டுழலும்பரமர்செயுஞ்செயலே.

தேவியை வவ்விய தென்னிலங்கையரையன் றிறல்வாட்டி
ஏவியல்வெஞ்சிலையண்ண னண்ணுமிராமேச் சுரத்தாரை
நாவியன்ஞானசம் பந்தனல்ல மொழியானவின் றேத்தும்
பாவியன்மாலை வல்லாரவர் தம்வினையாயின பற்றறுமே. ()

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# திருநாவுக்கரசு சுவாமிகள்

## நான்காந் திருமுறை.

### திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பாசமுங்கழிக்ககில்லா வரக்கரைப்படுத்துத்தக்க
வாசமிக்கலர்கள்கொண்டு மதியினுன்மால்செய்கோயில்
நேசமிக்கன்பினுலே நினைமினீர்நின்றுநாளும்
தேசமிக்கானிருந்த திருவிராமேச்சுரமே. (1)

முற்றினநாள்களென்று முடிப்பதேகாரணமாய்
உற்றவன்போர்களாலே யுணர்விலாவரக்கர்தம்மைச்
செற்றமால்செய்தகோயி திருவிராமேச்சுரத்தைப்
பற்றிநீபரவுநெஞ்சே படர்சடையீசன்பாலே. (2)

கடலிடைமலைகடம்மா லடைத்துமால்கருமமுற்றித்
திடலிடைச்செய்தகோயி திருவிராமேச்சுரத்தைத்
தொடலிடைவைத்துநாவிற் சுழல்கின்றேன்றாய்மையின்றி
உடலிடைநின்றும்பேரா வைவராட்டுண்டுநானே. (3)

குன்றுபோற்றேளுடைய குணமிலா வரக்கர்தம்மை
கொன்றுபோராழியம்மால் வேட்கையாற்செய்தகோயில்
நன்றுபோனெஞ்சமேநீ நன்மையையறிதியாயில்
சென்றுநீதொழுதுய்கண்டாய் திருவிராமேச்சுரமே. (4)

வீரமிக்கெயிறுகாட்டி விண்ணுறநீண்டரக்கன்
கூரமிக்கவனைச்சென்று கொன்றுடன்கடற்படுத்துத்
தீரமிக்கானிருந்த திருவிராமேச்சுரத்தைக்
கோரமிக்கார்தவத்தாற் கூடுவார்குறிப்புளாரே. (5)

ஆர்வலநம்மின்மிக்கா ரென்றவவ்வரக்கர்கூடிப்
போர்வலஞ்செய்துமிக்குப் பொருதவர்தம்மைவீட்டித்
தேர்வலஞ்செற்றமால்செய் திருவிராமேச்சுரத்தைச்
சேர்மடநெஞ்சமேநீ செஞ்சடையெந்தைபாலே. (6)

வாக்கினலின்புரைத்து வாழ்கிலார்தம்மையெல்லாம்
போக்கினற்புடைத்தவர்க ளுயிர்தனையுண்டுமாறன்
தேக்குநீர்செய்தகோயி றிருவிராமேச்சுரத்தை
நோக்கினல்வணங்குவார்க ளோய்வினை நுணுகுமன்றே. (7)

பலவுநாடமைசெய்து பார்தன்மேற்குழுமிவந்து
கொலைவிலார்கொடியராய வரக்கரைக்கொன்றுவீழ்த்த
சிலையினன்செய்தகோயி றிருவிராமேச்சுரத்தைத்
தலையினல்வணங்குவார்க டாழ்வராந்தவமதாமே. (8)

கோடிமாதவங்கள்செய்து குன்றினர்தம்மையெல்லாம்
வீடவேசக்கரத்தா லெறிந்துபின்னன்புகொண்டு
தேடிமால்செய்தகோயி றிருவிராமேச்சுரத்தை
நாடிவாழ்நெஞ்சமேநீ நன்னெறியாகுமன்றே. (9)

வன்கண்ணர்வாளரக்கர் வாழ்வினையொன்றறியார்
புன்கண்ணராகிநின்று போர்கள்செய்தாரைமாட்டிச்
செங்கண்மால்செய்தகோயி றிருவிராமேச்சுரத்தைத்
தங்கணலெய்தவல்லார் தாழ்வராந்தலைவன்பாலே. (10)

வரைகளொத்தேயுயர்ந்த மணிமுடியரக்கர்கோனை
விரையமுற்றறவொடுக்கி மீண்டுமால்செய்தகோயில்
திரைகண்முத்தால்வணங்குந் திருவிராமேச்சுரத்தை
உரைகள்பத்தாலுரைப்பா ருள்குவாரன்பினலே. (11)

திருச்சிற்றம்பலம்.

---

# திருவாசகம்.

திருச்சிற்றம்பலம்

தோலுந் துகிலுங் குழையுஞ் சுருடோடும்
பால்வெள்ளை நீறும பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
சூலமுந் தொக்க வளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.

நாடகத்தா லுன்னடியார் போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றே
ளூடகச்சீர் மணிக்குன்றே யிடையறு வன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத் தந்தருளெம் முடையானே.

திருக்கோவையார்.

பிரசந் திகழும் வரை யானையின் பீடழித்தார்
முரசந் திகழும் முருகிய நீங்கு மெவர்க்குமுன்னு
மரசம் பலததுநின் றாடும் பிரானருள் பெற்றவரிற்
புரை சந்தமேகலை யாய்துயர் தீரப் புகுந்து நின்றே

திருவிசைப்பா.

தனதனற் றோழா சங்கரா சூல பாணியே தாணுவே சிவனே
கனகநற் றாணே கற்பகக்கொழுந்தே கண்கண்மூன் றுடைய
[தோர் கரும்பே
யனகனே குமர விநாயக சனக வம்பலத் தமரசே கரனே
யுனகழ லிணையென் னெஞ்சினு ளினிதாத் தொண்டனே
[னுகருமா றுகரே.

திருப்பல்லாண்டு.

சீருந் திருவும் பொலியச் சிவலோக நாயகன்சேவடிக்கீ
ழாரும் பெறாத வறிவுபெற் றேன்பெற்ற தார்பெறு வாருலகி
லூரு முலகுங் கழற வுழறி யுமைமண வாளனுக்காட்
பாரும் விசும்பு மறியும் பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே.

திருமந்திரம்.

சிவனொ டொக்குந்தெய்வந் தேடினு மில்லை
யவனொ டொப்பாரிங் கியாவரு மில்லை
புவனங் கடந்தன் று பொன்னொளி மின்னுந்
தவனச் சடைமுடித் தாமரை யானே

பதினோராந்திருமுறை.

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்து நின் சேவடியே சேர்ந்தே—னிறந்திகழு
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
யெஞ்ஞான்று தீர்ப்ப திடர்.

ஒருமுரு காவென்றென் னுள்ளங் குளிர வுவந்துடனே
வருமுரு காவென்று வாய்வெருவா நிற்பக் கையிங்ஙனே
தருமுரு காவென்று தான்புலம்பா நிற்பத் தையன்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவருஞ் சேவகனே.

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கு—முருவாக்கு
மாதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தங் கை.

பெரியபுராணம்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலு நடந்தாலும்
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலும்
மன்றாடு மலர்ப்பாத மொருகாலு மறவாமைக்
குன்றாத வுணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீ தாயுமானசுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடல்

## * மலைவளர் காதலி.

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கண் மித்திரர்கள்
பக்கமுண் டெக்கா லமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிர மணுகாக்

* "பர்வத வர்த்தினி" எனவுஞ் சொல்லப்பெறுவர்.

கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளு முண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மைநின் றருளிற்
கருத்தொன்று முண்டா குமே
னதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானவா னந்த வொளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனு மகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுரூ தனன் றங்கையே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெ ணுமையே. (1)

தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடை யிலே நடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற் கீற்றிலே
பொட்டிலே யவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே யடியிலே மேற்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழைய விட்டு
நெட்டிலே யலையாம லறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத் திலே
நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெஞ்ஞான
ஞேயத்தி லேயு நிருதாண்
மட்டிலே மனதுசெல நினதருளு மருள் வையோ
வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெ ணுமையே. (2)

பூதமுதலாகவே நாதபரி யந்தமும்
பொய்யென் றெனைக்காட்டி யென்
போதத்தி னடுவாகி யடியீறு மில்லாத
போத பூரண வெளிக்கு

ளேதுமற நில்லென்று பாயமா வைத்து நினை
வெல்லாஞ்செய் வல்ல சித்தா
மின்பவுரு வைத்தந்த வன்னையே நின்னையே
யெளியேன் மறந் துய்வனோ
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
விளக்குமுட் கண்ணி லார்க்கு
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
வீறுவாதம் புகலும் வாய்
வாதநோ யாளர்க்கு மெட்டாத முக்கணுடை
மாமருந் துக் கமிர் தமே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெ ணுமையே (3)

மிடியிட்ட வாழ்க்கையா லுப்பிட்ட கலமெனவு
மெய்யெலா முள்ளு டைந்து
வீறிட்ட செல்வர்தங் தலைவாயில் வாசமாய்
வேதனைக ளுற வேதனுந்
துடியிட்ட வெவ்வினையை யேவினன் பாவிநான்
றொடரிட்ட தொழில்க ளெல்லாந்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
றொண்டர்பணி செய்வ தென்றோ
அடியிட்ட செந்தமிழி னருமையிட் டாரூரி
லரிவையோர் பரவை வாயி
லம்மட்டு மடியிட்டு நடைநடந் தருளடிக
ளடியிது முடியி தென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே
வளமருவு தேவை பரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெ ணுமையே. (4)

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகி யெழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்ரதள
புட்பமிசை வீற்றி ருக்கு

நாரணி மனாதீத நாயகிகுணாதீத
நாதாந்த சத்தி யென்றுன்
ஞமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச் சரிக்க வசமோ
வாரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
வகிலாண்ட கோடி யீன்ற
வன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசு
மானந்த ரூப மயிலே
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவை யரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெ ணுமையே. (5)

பாகமோ பெறவுனைப் பாடவறி யேன்மல
பரிபாகம் வரவு மனதிற்
பண்புமோ சற்றுமிலை நியமமோ செய்திடப்
பாவியேன் பாப ரூப
தேகமோ திடமில்லை ஞானமோ கனவிலுஞ்
சிந்தியேன் பேரின் பமோ
சேரவென் றுற்கள மனதுமோ மெத்தவுஞ்
சிந்திக்கு தென் செய்குவேன்
மோகமோ மதமோ குரோதமோ லோபமோ
முற்றுமாற் சரிய மோதான்
முறியிட் டெனைக்கொள்ளு நிதியமோ தேடவெனின்
மூசுவரிவண்டுபோல
மாகமோ டவும்வல்ல னெனையாள வல்லையோ
வளமருவு தேவை யரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெ ணுமையே. (6)

தூளேறு தூசுபோல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கி நாளுஞ்
சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவை யெல்லா

நாளேற நாளேறு வார்த்திக மெனுங்கூற்றி
னட்பேற வுள்ளு டைந்து
நயனங்க ளற்றதோ ரேறு போலவே
நானிலந் தனி லலையவோ
வேளேறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று
விரையேறு மாலை சூடி
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங் கூந்தலாய்
வாளேறு கண்ணியே விடையேறு மெம்பிரான்
மனதுக் கிசைந்த மயிலே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெ ணுமையே (7)

பூதமொடு பழகிவள ரிந்திரிய மாம்பேய்கள்
புந்திமுத லான பேய்கள்
போராடு கோபாதி ராக்ஷசப் பேய்களென்
போதத்தை யூட ழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானிவ் வல்ல லெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந் த்ராதிக்ய
வித்தையை வியந் தருள்வையோ
நாதவடி வாகிய மஹாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்ட வெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞானவா னந்த மயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய
மகிமைபெரு பெரிய பொருளே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெ ணுமையே. (8)

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

இதுமுதல் ஐந்து பதிகங்கள்

சோ. மு. முத்தையப் பாவலரவர்கள் இயற்றியன.

# ஸ்ரீ இராமநாதர் பதிகம்.

---

நன்றும் நடராஜ நற்புரத்தி னுபகனே
யென்று மிராமநா தீச்சுரனே—குன்றாத
பேரருளைப் பெய்தே பிறப்பின் பெருமையுற
வாரமுடன் வந்தருள்செய் வாய். (1)

ஒன்றாகி யொன்றுக்கு ளொன்றாகி யொன்றவர்க்கு
நன்றாகி நன்றருளு நாயகா—என்றாகி
வந்தாய் வகையறியேன் மாமணியே மால்விடையின்
மந்தணமாய் வந்தருள்செய் வாய், (2)

உருவா யுருவருவா யொப்பின்றி யோங்கு
மருவா யகண்டமா யானோய்—கருவாயைக்
காட்டாது காப்பாய் கசிந்துன் கழல்காண
மாட்டாதேம் வந்தருள்செய் வாய். (3)

அம்மையப்பா வஞ்செழுத்தோ யண்ணா வழல்வண்ணா
இம்மையப்பா லேற்றமுற வேத்துகின்றேம்-எம்மையெப்பா
லாக்கினுமே யார்கேட்பா ரைந்துமுகா வாதரித்து
வாக்கருளி வந்தருள்செய் வாய். (4)

முன்னுக்கு முன்னான மூவா முழுமுதலே
பின்னுக்குப் பின்னான பேரொளியே—தன்னுக்குட்
டானுணர்வார் தன்பொருளே தக்கன் றலையறுத்தோய்
மானுடனே வந்தருள்செய் வாய். (5)

கண்டன் கரிய கரும்பே கனியமுதே
அண்டர்களை யாண்டருளு மையனே—பண்டைமறை
தேடரிய தெய்வமே செக்கர்நிறச் செம்மலே
வாடலின்றி வந்தருள்செய் வாய். (6)

தித்திக்குந் தேனே செழும்பாகே தீஞ்சுவையே
பத்திக்குப் பாலருளும் பண்ணவனே—யெத்திக்கு
மாடையா யன்றணிந்தோ யத்தா வனங்கன்மலர்
வாடையுறு வந்தருள் செய்வாய். (7)

மட்டுண்டு வண்டூதும் வன்கொன்றை மன்னுமெந்தாய்
கட்டுண்ட கன்மங் கழற்றியே—குட்டுண்டு
மங்கையர்பால் மாழ்குமதி மாற்றி மலையரையன்
மங்கையுடன் வந்தருள்செய் வாய் (8)

நாரணனு நான்முகனு நாடரிய நற்பிழம்பே
ஆரணமு மாகமமு மானவனே—வாரணனைச்
சண்முகனைத் தந்த தனியே தமியேமை
வண்மையுற வந்தருள்செய் வாய். (9)

கானப்பேர்க் காளாய் கடம்பவனக் கண்ணுதலே
மானப்பேர் வாழ்வருளும் வள்ளலே—யீனப்போர்
வேளை விழித்தெரித்தோய் வேயில் வெளிவந்தோய்
வாழ்கவெமை வந்தருள்செய் வாய். (10)

திருச்சிற்றம்பலம்.

---

## ஸ்ரீ பர்வதவர்த்தனி அம்மை பதிகம்

நாமருவி நன்றும் நடராஜ நற்புரத்திற்
பூமருவு பொற்றொடியார் போற்றிசைப்பத்—தாமருவும்
பண்மொழியெம் பாவாய் ப்ருவத வர்த்தனிநின்
றண்மொழியாற் றக்கவரந் தா. (1)

அருட்சூலா லண்ட மனைத்தையுமே யாக்கு
மிருட்சே ரெழிற்குழலி யெம்மே—தெருட்சேர்
பெருவாழ்வும் பேறும் பெருமகிழ்வும் பெற்றித்
தருவாழ்வுந் தாளிணையுந் தா. (2)

தேன்பொழியுஞ் செவ்வாய்த் திருமுகமுஞ் செங்கரமுங்
கான்பொழியுங் காட்சிக் கழலிணையும்—நோன்பொழியும்
வாழ்வு மதியமுதம் வாரா வளனுலகுந்
தாழ்வின்றிச் சாரவரந் தா. (3)

கற்றூர்க்குக் காட்சியே கல்லார்க்குக் கற்சிலேயே
யுற்றூர்க் குவப்பருளு முத்தமியே—பெற்றூர்க்கு
வீடே விருந்தே வியன்பேறே மேலாமுன்
ருடலேயிற் சாற்றவரந் தா. (4)

பொன்னேயப் பொன்னெளியே பூவேயப் பூமணமே
மின்னேயம் மின்னின் விளக்கமே—யன்னே
மலேயீன்ற வல்லியே வந்தேற்கு மன்னு
தலேயீந்து தண்பொருளேத் தா. (5)

முத்தமே முன்னும் முழுமணியே முன்னினர்க்குத்
தித்திக்குந் தேனே செழுங்கனியே—முத்திநிதிப்
பேழையே பேரழகி பெற்றியுறும் பெய்வளேயே
தாழ்வின்றித் தக்கவரந் தா. (6)

சற்றுந் தளராத் தனத்தாளே தண்கூடற்
கொற்றவனுர் கொஞ்சுங் குமரியே—பற்றுரைக்
காத்தருளுங் கன்னியே கற்பகமே கைகுவித்தேந்
தாழ்த்தாது தக்கவரந் தா. (7)

வண்டுபடா மாமலரே வாடா மருக்கொழுந்தே
துண்டுபடாத் துய்ய சுடர்க்கரும்பே—கண்டுவந்தோர்
கண்ணெளியே காந்திக் கதிர்முடிகொள் கற்பரசி
தண்ணளியாற் றக்கவரந் தா. (8)

பச்சைப் பசுங்கிளியே பாதிப் பவளமலே
யிச்சையுட னேற்ற விறைவியே—நச்சினரைச்
சேர்க்குந் திருவடியைச் சிந்தித்தேந் தேம்பலின்றித்
தார்க்கமழத் தாளிணேயைத் தா. (9)

வேரும் வெறுந்தெய்வம் வேண்டேம் விரிகருணேப்
பேருற் பிறங்கும் பெருவாழ்வே—மாருன
புன்மையரைம புல்லேம் புலனெறியே போற்றினேந்
தன்மையிதே தண்கிருபை தா. (10)

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# ஸ்ரீ நடராஜர் பதிகம்.

சீர்தாங்குந் தில்லைத் திருவுலாஞ் சிற்சபையி
லோர்தாங்க வென்றென்று மிச்சையாய்த்—தார்தாங்கிக்
கூத்தாடுங் கோலக் குறிப்பென்னே கொள்ளகில்லேம்
ஏத்தாடு மெந்தா யிசை. (1)

அம்பலத்தி லாடியபின் னந்தரங்க மாங்கேயென்
வம்புலாம் வஞ்சி மதிப்பளோ—எம்பரனே
யோடெடுத்தா யும்ப லுரியுடுத்தா யொற்றைக்கா
லாடெடுத்தா யஃதென் னருள். (2)

பூணின்றிப் பொல்லாப் பொறியரவைப் பூண்டிருந்தும்
நாணின்றி நங்கையிடம் நத்தினளே—மாணின்றி
அக்கு மயண்றலைகாட் டாத்தி யறுகெருக்கும்
எக்கா லு மீதணிந்த தென். (3)

சண்டன் றருக்கினுற் றுங்குந் தனிப்பாதம்
விண்டு விழைந்தும் விரிக்காதேன்—கண்டிருங்கா
லாலவாய்க் கண்டுவா னூரூர்க் கணுகுவான்
சீலனருள் செய்யாத தென். (4)

மந்திரங் கண்மற்றும் மறைகள் வடமொழியாந்
தந்திரமச் சார்பெனவே சாற்றுவரே—யெந்தை
வழுவிலா வாசகத்தை வண்கைம் மலரா
லெழுதினையே யெற்றிற் கிசை. (5)

தென்னாடு சீலஞ் சிறப்புச் சிறிதிலெனுங்
கொன்னாளர் கூற்றதனைக் கொள்ளாது—முன்னாளி
லிந்நாட்டி லெண்ணி லெழிலாட லேன்செய்தா
யெந்நாடோ வேற்ற மிசை. (6)

அண்டமெலா மாட்டாம லாட்டுவா னன்றோநீ
யண்டரெலா மஞ்சலிக்க வாடியதென்—விண்டாரைப்
பேணும் பெருவெளியே பேச்சிறந்த பேர்நிலையே
காணக் கனிந்தருளிக் காட்டு. (7)

வம்பலரும் வண்கொன்றை மாலேயநீ மன்னும்பே
ரம்பலஞ்சிற் றம்பலமா யானதென்னே—யம்பலம்பு
வேணியா லென்விடையின் மேலவா மேவுதலங்
காணியா காரணத்தைக் காட்டு. (8)

புன்மைமிகும் புத்தர்களேப் போக்கும் பொருளில்லாத்
தன்மையர்பாற் ருனுமொன்ருய்ச் சார்ந்ததென்னே—நன்மைமிகு
வாதவூர் மாமணியின் வன்மை மலர்த்திடவோ
ஏதோதா னெம்மா னிசை (9)

வீட்டை விரும்பி வெகுநாளாய் மேவினர்க்குச்
சீட்டளித்துச் சேர்ப்பித்த செய்யனீ—நாட்டகத்தில்
நின்பேர் நிகழ்த்தி நிலேத்தபதி நேர்ந்தீதமை
யன்புடனே யாண்டருள்வை யால். (10)

திருச்சிற்றம்பலம்.

---

# ஸ்ரீ இராமநாதர் பதிகம்.

ஆசிரிய விருத்தம்.

கார்கொண்ட தண்டலேப் படலேயா ணுயுறுங்
கன்னியந் தமிழ் வைப்பினிற்
கமழுமண நாறுநற் பொதிகையஞ் சாரலிற்
கவினுமுயர் பொருநை வளனும்
ஏர்கொண்ட பாலரு வாயிளங் கோளரியெம்
மிறைமக னருந் தமிழினே
யெழுதியிடு மேடுமுன் னேறவுந் திச்சைவ
மீட்டுமுயர் வைகை வளனும்
பேர்கொண்ட முக்கால மும்பிறங் கிடவறம்
பேணுநம் பாண்டி நாட்டிற்
பெருகுபல போகந் தவப்பேறு வீடுதரு
பெற்றிநிறை காணே நகரின்
சீர்கொண்ட நன்னகர மீதெனப் புலவருந்
தேவர்களு மேத் தெடுப்பத்
திருமாது குடியாய நடராஜ புரமேய
ஜெயராம நாத பரனே. (1)

ஆயிர பணுமகுட முடவுப் பணிப்பாயி
லறிதுயிற் கொண்ட நெடியோன்
அஞ்சிறைப் பொலனொளிசெ யெகினத்தின் மீதிவரு
மயனிருவர் தத் தமக்குண்

மேயமல வாணவப் பேதைமையை நீக்குவான்
வேண்டிநின் றறக் கருணையால்
வெருகோடி சூரியரு மொளிமழுங் குந்தகைய
வெய்யநலனற் பிழம்பாய்த்

தூயவா னண்டமுடி யடிபாத லத்தினுந்
தோயாது நின் றிருவரைத்
தொட்டலைத் திடுமகங் காரந் தவிர்த்தருள்
சுரந்தறி வுறுத்து முகலே

சேயவா னொளிபரவு திருமேனி வண்ணனே
தேவனே யெனை யாளுவாய்
திருமாது குடியாய நடராஜ புரமேய
ஜெயராம நாத பரனே. (2)

இந்திரன் மதலைசெ யிருந்தவத் திறனறிய
விறைவியொடு வேட வடிவா
யெழுதரிய மறைகள்பல தேடியுங்காணாத
வினைமலர்க் கழல்க ணோவச்

சந்திரன் பணியாறு சடைமுடி கரந்துநற்
றழைபீலி யுடை யணிந்து
தண்ணருட் குறுநகை ததும்புகட் செவ்வாய்
தழைத்திட வடைந் தங்கனே

வந்தமுறை கொண்டுபோ ராடிநற் கருணையால்
வாங்குதனு வடி சுமந்து
மன்விடையின் மீதினிற் காட்சியுந் தந்தவனை
மறுபிறப் பறுதி னத்திற்

சிந்தையொன் றுகவருள் செய்துபெரு வீடுதவு
தேவனே யெனை யாளுவாய்
திருமாது குடியாய நடராஜ புரமேய
ஜெயராம நாத பரனே. (3)

இறைவனினை தறுபத்து நாலுவிளை யாடல்பெறு
மெண்ணரும் பெருமை வாய்ந்த
வினியசெந் தமிழ்நாடு புன்சமண விருளினு
லேந்தலுட னெவரு மாதி
முறைகுன்றி நற்பூதி சாதனத் துறைபிறழ
மூதறிவின் மிக்க விருவர்
முன்னிமுன் னிக்கலுழ வன்னவர்கள் பரிவினை
முடுக்கவுஞ் சைவ நெறியின்
றுறைவிளங் கிக்கொடிய சமணவிரு ளொழியவுந்
துகளறு பெருங் கருணையாற்
றென்மறைப் பாலரு வாயிளந் தோன்றலொண்
சுடரளித் தருளு முதலே
சிறைபுகும் பேரறிவை விடுவித்து மாமலர்த்
திருவடியி லெனை யாளுவாய்
திருமாது குடியாய நடராஜ புரமேய
ஜெயராம நாத பரனே (4)

கருவழிக் கஞ்சியொண் கயிலைதனை வலம்வந்த
கருணைவா கீச முனியைக்
கடலுலக முய்ந்திடத் திருவுளங் கொண்டுபிழை
காட்டியிங் கடைய வைத்துப்
பெருவாழ்வி னுக்குப் புறம்பான நெறிபுகும்
பெற்றிதந் தப்பா தகப்
பேயமணர் துறையினின் மீறிடச் சூலைநோய்
பின்னளித் தின்ப மூறும்
பொருவிலா நினதருட் டுறையினிற் கொண்டுவிண்
புகழுநா வுக்கர செனப்
பொற்பார் திருப்பெய ரளித்தரிய தாண்டகப்
புதுநறுந் தமிழ் மாரிபெய்
தெருண்மயக் கொண்மூவை யுட்கொண்ட தேவநின்
றிருவடியி லெனையாளு வாய்
திருமாது குடியாய நடராஜ புரமேய
ஜெயராம நாத பரனே (5)

செப்பருந் தோழமை யிலாதகுறை யுன்னியோ
செந்தமி ழுருந்து தற்கோ
திகழுமடி யார்தமக் கெளியவ னெனுஞ்சொலைத்
தெற்றென நிறுத்து தற்கோ
ஒப்பரிய நற்றிருத் தொண்டத் திருத்தொகையி
னுயர்பயனை யுல கடையவோ
வுலகளந் தவனயன் காணாத பாதமலர்
ரோங்குபூ மக ளணியவோ
தப்பரிய தொண்டர்களி னெச்செயலு மருள்வழிச்
சார்பெனக் காட்டு தற்கோ
தண்பொழியு மதுரமொழி நம்பியா ரூரரெஞ்
சற்குர வரைப் பூவினிற்
செப்பமொடு தந்துபின் கயிலைக் கழைத்தவா
திருவடியி லெனையாளு வாய்
திருமாது குடியாய நடராஜ புரமேய
ஜெயராம நாத பரனே (6)

இதுமுதல் மூன்று பாட்டும் குளகம்.

எழுதரிய மறைமுடிவி னிற்பழுத் திடுகனியி
னின்னறுஞ் சுவைய தான
வெமதுவை திகசைவ நற்றுறையி னேற்றமிவ்
விரும்புவியி னீடு நிலவிப்
பழுதான புத்தப் புறச்சமய மற்றுள்ள
பலசமய வீற டக்கிப்
பரமனெம திறைவனே முழுமுத லெனக்கொண்டு
பரவிடப் பண்ணு தற்கோ
தொழுவோர் படிப்போர் நெருப்பிலிடு மிழுதெனத்
தோய்ந்துருகி நீராள மாய்ச்
சுடரெழுக் கம்பமென வானந்த பரவசச்
சுழலினிற் சுற்று மினிமைச்
செழுமைதரு திருவாச கந்திருக் கோவைநற்
றீந்தமி ழளிப்ப தற்கோ
திருமாது குடியாய நடராஜ புரமேய
ஜெயராம நாத பரனே (7)

வாராத வுலகமது குடியேற வாவினர்கள்
வழிதவறி டாது முறையே
மார்க்கந் தெரிந்துபடி பதினாறு மேறிநல்
வாழ்வுதரு வீடடைய வோ
போராடு காமப் புறப்பகைச் சுற்றங்கள்
பொய்யெனக் காட்டு தற்கோ
புறக்கரண மெத்தகைய தொழிலியற் றினுமகம்
பொலிகரண மிறைவ னடியின்
னேராக வொப்பித்து மற்றொன்று மில்லாது
நெஞ்சகம் பொறை நெறியுடன்
னிற்பதே நெறியெனக் காட்டுதற் கோவிந்த
நீணிலத் தொருமை யுடனே
சீரான புலனெறியி னுற்றவர்க் கிறைவனே
திகழ்குரு வெனக் காட்டவோ
திருமாது குடியாய நடராஜ புரமேய
ஜெயராம நாத பரனே (8

முற்பல பிறப்பினிற் செய்தவத் தாலறிவு
முதிரவிரு நிலை கடந்து
முத்திக் குரித்தான திருவருட் டுறையினின்
மோகமுற் றோர கத்தே
நிற்றெழும் பேரன்பின் வலையிலெம் மருளிறைவ
னின்றிடுவ னென்ற நிலையை
நித்திய சொரூபத்தை யடைகுநர்கள் கண்டுகொள
நிலைநாட்டி வைப்ப தற்கோ
பற்பலவெ னும்பேத மையறவே யடியவர்கள்
பற்றுறாது நிற்ப தற்கோ
பான்மைமிகு மெமதுமணி வாசகக் கர்த்தரைப்
பார்தனிற் றந் தழிவிலாச்
சிற்பரவெ ளிக்குளொன் றுக்கியருள் செய்தவா
திருவடியி லெனையாளு வாய்
திருமாது குடியாய நடராஜ புரமேய
ஜெயராம நாத பரனே. (9)

பல்லா யிரங்கோடி கதிரொளி பரப்பிப்
படர்ந்தாடு செஞ்சடை தனிற்
பற்றிடு மிளம்பிறை நறும்புனற் கூவிளப்
பானிற வெருக்கு மத்தம்
வில்லார் கடுக்கையர வறுகாதி யழகுசெய
வெண்டலையி னொளி பரவிட
மேவுகடு கண்டம் பொலிந்திட தலைமாலை
வெள்ளென் பசைந்து கவின
நல்லா ளெமக்கம்மை யொருபாதி திகழுநன்
ளுகக் கண மிளிரமா
னண்ணுசுடர் மழுவாதி டமருக முழங்கிட
நலந்தரும் கழ லொலிக்கத்
தில்லையி னடஞ்செயுந் தேவனே வாழ்வுதரு
திருவடியி லெனை யாளுவாய்
திருமாது குடியாய நடராஜ புரமேய
ஜெயராம நாத பரனே. (10)

திருச்சிற்றம்பலம்.

---

## ஸ்ரீ பர்வதவர்த்தனி அம்மை பதிகம்

சந்த விருத்தம்.

கானஞ் செறிமுகி லுளும் பெயவரு
காலின் புனல்சாலிக்
கதிருஞ் செழிய கரும்புஞ் சுவைதரு
கதலிப் பைங்கமுகுந்
தானந் தொறுநிலை யேறுங் கழனிகள்
சாரும் பலமாடுந்
தவழும் பணில வொழுங்கின் புடைதிகழ்
தாளத் தங்கிடையே
ஈனுங் குருகின மேவும் பொலனொளி
ரெகினத் தின்குழுவு
மிலகும் பெடையொடு தங்கும் பொலிவள
வெழிலைக் கொண்டுவளர்

வானம் புகழ்தரு நீரின் றிகழ்நட
  ராஜபுரந் தனில்வாழ்
வாசஞ் செறிகுழ லாயெம் பருவத
  வர்த்தனி யம்பிகையே. (1)

வாவும் பிணையொடு மானுந் திகழ்வுற
  வாழும் பொழின்மேவி
மருவும் புலிகளு மெங்குங் கிளையென
  வதியப் பொங்குமத

மாவுந் திறலரி யேறுங் கனிவொடு
  வாசஞ் செயநாகம்
வளருங் குறுநகு லங்கண் டுறவென
  மகிழப் பைங்கிளையைத்

தாவுஞ் சிறகொளிர் சேனந் தழுவிடு
  தானம் பலவான
தகவுஞ் செறிபுக ழுங்கொண் டெழிலுறு
  தரணிக் கொன்றெனவே

மாவுங் குடிகொளு நீரின் றிகழ்நட
  ராஜபுரந் தனில்வாழ்
வாசஞ் செறிகுழ லாயெம் பருவத
  வர்த்தனி யம்பிகையே. (2)

தேசின் றிகழ்மயில் பேசுஞ் சிறுகிளி
  தேடும் பொனின்மேனி
திகழுஞ் சிறையன மும்பொங் கெழிலுறு
  சினையிற் றங்குமலர்

மூசும் பொலனளி கூவும் பலகுயின்
  மோகந் தருபூவை
முதிரும் பசுமை யிலங்கும் புறவிணை
  முறைபற் றன்றில்களும்

வீசுங் கதிர்விடு மாடஞ் செறிதட
  மேவும் புனல்வாவி
விழையும் பெருமண முந்தும் பொழிலினும்
  விரவித் தங்கிநிதம்

வாசஞ் செயுமெழின் மேவுந் திருநட
ராஜபுரந் தனில்வாழ்
வாசஞ் செறிகுழ லாயெம் பருவத
வர்த்தனி யம்பிகையே. (3)

பாலுந் தெளிதரு தேனுஞ் சுவைமிகு
பாகுங் குலேமேவிப்
பரவுங் கதலி கனிந்தங் கிழிதரு
பலவிற் றண்கனியுஞ்

சாலுந் தழைநிறை சூதந் தருகனி
தானுங் குளமேயத்
தழையுஞ் செழிய கரும்பின் சாறொடு
தனிநற் பொங்க முதும்

மேலுஞ் சுவைபிற வாலுங் கொடுபத
மேவும் படிசேர
விரவுந் திருவமு தும்பின் னுகிட
மெயினிக் குந்திருவே

மாலுந் திருவளர் நீரின் றிகழ்நட
ராஜபுரந்தனில் வாழ்
வாசஞ் செறிகுழ லாயெம் பருவத
வர்த்தனி யம்பிகையே. (4)

மாரன் பொழிகணே யாலங் கறிவது
மாறுஞ் செயலாகி
மலருந் திகழரவிந்தந் தனைநிகர்
வதனச் செந்துவர்வாய்

காரின் செறிகுழல் வேலம் பெனும்விழி
காணுங் குடம் வானிற்
கவினுங் குலகிரி யும்பந் தெனுமுலே
கனியப் பொங்குமெழில்

ஈரந் தருமொழி மேவுங் கணிகைய
ரேதந் தனின்மாழ்கி
யிரவும் பகலு முழன் றுந் திரிதரு
மெளியற் கென்றருள்வாய்

வாரம் பொலிதலை நீரின் றிகழ்நட
ராஜபுரந் தனில்வாழ்
வாசஞ் செறிகுழ லாயெம் பருவத
வர்த்தனி யம்பிகையே.

வானம் பழமறை தானும் பரிபுர
மாகுந் தவமேவி
வதியுங் கழலழ கும்பொன் றுடியிடை
வனசச் செங்கரமெஞ்

ஞானந் தருமுலை கோலங் கனியெழில்
நாளுஞ் செறிவாக
நளிருந் திருமுக மந்தண் கருணைகொ
ணயனப் பங்கயமால்

தேனுண் சுரிகுழல் யாவும் பொலியெழில்
தேசின் பிரகாசந்
திசழும் படியெதிர் வந்துன் றெரிசனை
சிறியற் கென்றருள்வாய்

மானும் புகழ்நிறை வாகுந் திருநட
ராஜபுரந் தனில்வாழ்
வாசஞ் செறிகுழ லாயெம் பருவத
வர்த்தனி யம்பிகையே.

ஆடுஞ் சடைமுடி நாதன் றிருவுரு
வாகந் தனிலேறி
யவிரும் பவள விருங்குன் றினிலெழி
லலரப் பைங் கொடியின்

ஏடின் பலமலர் தாமங் கதிகதி
ரேயும் படிதேசின்
இலகுங் கனிவுட னென்றுந் திகழ்வுறு
மிசைமிக் கொண்குயிலே

வாடும் பயிரெதிர் மேவுங் கருமுகில்
வானஞ் சொரிநீரின்
மயலின் கழிதுயர் பொன்றும் படியெனை
மகிழற் கென்றருள்வாய்

டும் பலவள ருரும் புகழ்நட
ராஜபுரந் தனில்வாழ்
வாசஞ் செறிகுழ லாயெம் பருவத
வர்த்தனி யம்பிகையே (7)

வேதன் கரமது தேயும் படியென
வேகங் கொடுபூவில்
விடவுந் திரிகைகயி லென்றுஞ் சுழல்வுறு
மிடியிற் றங்கிவரு
மேதந் தருபவ மாறுஞ் செயலனு
வேனுங் கருதாமல்
இடரும் பொறிதரு மின்பம் பெரிதென
வெணியற் பொன்றரணி
மாதின் பெருநகை மீதின் கனிவுடன்
வாழும் புவிவாழ்வின்
மதிவிண் டெழிலடி யின்பந் தனையுற
வரமெற் கென்றருள்வாய்
மாதந் தருமழை நீரின் றிகழ்நட
ராஜபுரந் தனில்வாழ்
வாசஞ் செறிகுழ லாயெம் பருவத
வர்த்தனி யம்பிகையே (8)

மேகஞ் செறிமின னீரின் குமிழியின்
வேடந் தனைநாளும்
விழையுஞ் சிறுமதி யின்பம் பெரிதென
விரவிப் பின்றெளியா
மோகம் பெருகிட நீடும் புவிதனின்
மூசும் பல மாயை
முழுகும் படிசெய நன்றென் றிளமைபின்
முதிரச் சிந்தைதனிற்
சோகங் கொடுபல நோயின் பருவரல்
தோயுங் கருவூரைத்
துணையென் றுழல்பவர் தம்பங் ககல்வுறு
தொடர்பெற் கென்றருள்வாய்



மாகம் பொருபொழி னீரின் றிகழ்நட
ராஜபுரந் தனில்வாழ்
வாசஞ் செறிகுழ லாயெம் பருவத
வர்த்தனி யம்பிகையே. (9)

தேடும் புகழ்மனை ஞானந் திகழ்தரு
சேயின் குழுவாதி
செறியும் பலபொரு ளின்பங் கெழுமிய
திருவைத் தந்துநிறை

கூடும் பெருநல னியுந் தருவளர்
கோலம் பொலிவானிற்
குலவும் புகழற மென்றுஞ் செயுநினை
குவியப் பங்கமிலார்

நாடுந் தவநெறி சாருஞ் செயலது
நாளும் பொலிவாக
நளிருந் திருவருள் தந்துன் றிருவடி
நணுகற் கென்றருள்வாய்

மாடும் பொழினிரை யாறுந் திருநட
ராஜபுரந் தனில்வாழ்
வாசஞ் செறிகுழ லாயெம் பருவத
வர்த்தனி யம்பிகையே. (10)

திருச்சிற்றம்பலம்.

---

வான்முகில் வழாதுபெய்க மலிவளஞ் சுரக்கமன்னன்
கோன்முறை யரசுசெய்க குறைவிலா துயிர்கள்வாழ்க
நான்மறை யரங்களோங்க நற்றவம் வேள்விமல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முக்கிய அறிவிப்பு.

---

இந்நூலும் அடியிற்கண்ட அரிய பெரிய நூல்களும், இரங்கோன் மொகல் வீதி 85-நெ. வீடு. வெ. கண. வெ. சொக்கலிங்கச் செட்டியார் அவர்களிடம் பெற்றுக் கொள்ளலாம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| "ப்ரணவ வித்யா பரிமளம்" என்னும் | | |
| ஓங்கார விளக்கம் | 2 | 4 |
| அஷ்டவிம்ஸதி தோத்திரப் பிரபந்தம் | 0 | 4 |
| தேவாரம் வேதசாரம் | 3 | 0 |

K. E. P. Works, Rangoon.